6558

**45 T I, II**

**අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2021(2022)**
**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2021(2022)**
**General Certificate of Education (Ord. Level) Examination, 2021(2022)**

| | | |
|---|---|---|
| භරත නැටුම් I, II | | පැය තුනයි |
| பரதநாட்டியம் I, II | | மூன்று மணித்தியாலம் |
| Bharatha Dancing I, II | | Three hours |

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவு செய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## பரதநாட்டியம் I

**அறிவுறுத்தல்கள் :**

* எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.
* **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.
* உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.
* அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** கடவுள், குரு, சபைக்கு வணக்கம் செலுத்தும் நாட்டிய உருப்படி
(1) கீர்த்தனம் (2) அலாரிப்பு (3) வர்ணம் (4) பதம்

**2.** 'தளாங்குதொம்' இற்குப் பிரயோகிக்கப்படும் பாதபேதம்
(1) உத்பிளவனம் (2) மண்டலம் (3) பிரம்மரி (4) பாதசாரிகா

**3.** கிண்கிணியின் அதிதெய்வம்
(1) பூமாதேவி (2) பிரம்மா (3) சபாபதி (4) தாராகணம்

**4.** வாமன அவதாரத்திற்காக அபிநயிக்கப்படும் முத்திரைகளை எடுத்துக்கொள்ளும் நவக்கிரக ஹஸ்தம்
(1) புதன் (2) வியாழன் (3) வெள்ளி (4) ராகு

**5.** "சந்தனே, புஜகே...." என ஆரம்பிக்கும் அசம்யுத ஹஸ்த ஸ்லோகம்
(1) கடகாமுகம் (2) சர்ப்பசீர்ஷம் (3) பத்மகோசம் (4) மிருகசீர்ஷம்

**6.** சங்கீர்ணஜாதி ஜம்பை தாளத்தின் அங்க அடையாளம்
(1) $|_3 \cup O$ (2) $|_4 \cup O$ (3) $|_7 \cup O$ (4) $|_9 \cup O$

**7.** குருவுக்கும் சிஷ்யனுக்கும் இடையில் தோன்றும் பாவம்
(1) பக்திபாவம் (2) தாசிபாவம் (3) மதுரபாவம் (4) வாத்சல்யபாவம்

**8.** ரௌத்திர ரசத்தின் எதிர் ரசம்
(1) பயானகம் (2) அற்புதம் (3) கருணை (4) வீரம்

**9.** மொத்த அட்சர எண்ணிக்கையாக 14 இனை எடுத்துக்கொள்ளும் தாளங்கள் யாவை?
(1) சதுஸ்ரஜாதி துருவதாளம், சங்கீர்ணஜாதி திரிபுடைதாளம்
(2) கண்டஜாதி அடதாளம், மிஸ்ரஜாதி மட்டியதாளம்
(3) சங்கீர்ணஜாதி ரூபக தாளம், மிஸ்ரஜாதி ஏகதாளம்
(4) சதுஸ்ரஜாதி துருவதாளம், கண்டஜாதி அடதாளம்

[பக். 2 ஐப் பார்க்க

10. கரையோர மக்களின் களிப்பூட்டும் நடனமாக அமைவது
(1) பந்து நடனம் (2) கொழுந்து நடனம்
(3) மீனவ நடனம் (4) குறவன், குறத்தி நடனம்

11. 'நாதமுள மத்தளம்...' எனத் தொடங்கும் ஸ்லோகம் எதனைக் குறித்து நிற்கிறது?
(1) பாத்திர பகிர்ப்பிராணன் (2) சபாலட்சணம்
(3) சபாநாயகன் லட்சணம் (4) பாத்திரப் பிராணன்

12. சங்க காலத்தில் பெண்களால் மட்டுமே ஆடப்பட்ட கூத்து
(1) குரவை (2) துணங்கை
(3) வெறியாடல் (4) முன்தேர்குரவை

13. ஒரே விதமான பாத அசைவுகளையும் வெவ்வேறு விதமான கை அசைவுகளையும் எடுத்துக்கொள்ளும் அடவு
(1) தாதெய்தெய்த (2) நாட்டடவு
(3) தட்டுமெட்டடவு (4) குதித்துமெட்டடவு

14. ;தெய், திதி, தெய் – இதிலுள்ள மொத்த மாத்திரைகளின் எண்ணிக்கை யாது?
(1) 6 (2) 7 (3) 8 (4) 12

15. கலாநிதி பத்மா சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் அனைத்து இந்திய பரதநாட்டிய சங்கத்தின் சார்பில் ஆயிரம் நடனக்கலைஞர்கள் பங்குபற்றிய நிகழ்வு
(1) தஞ்சைப் பெருங்கோயிலின் ஆயிரமாம் ஆண்டு விழா
(2) இராஜராஜசோழனால் ஆலயப்பணி ஆரம்பிக்கப்பட்ட தினம்
(3) தஞ்சைப் பெருவுடையார் கோயில் கும்பாபிஷேக தினம்
(4) உலக நடன தினம்

16. முதலாவது திதி தெய் அடவு அமைந்துள்ள தாளம்
(1) ரூபகதாளம் (2) ஆதிதாளம் (3) மட்டியதாளம் (4) மிஸ்ரசாபு

17. தாளம் ஆரம்பிப்பதற்கு முன்னராகவே பாட்டு, ஜதி என்பன ஆரம்பிக்கும் எடுப்பு
(1) சம எடுப்பு (2) விசம எடுப்பு (3) அநாகத எடுப்பு (4) அதீத எடுப்பு

18. இரண்டு கைகளிலும் கபித்த ஹஸ்தத்தினைப் பிரயோகிக்கும் தேவ ஹஸ்தங்கள்
(1) கணபதி, இலட்சுமி (2) விஷ்ணு, இந்திரன்
(3) சிவன், முருகன் (4) சரஸ்வதி, பார்வதி

19. கோபுரம், உயரம், நிலவு போன்றவற்றைப் பார்ப்பதற்குப் பிரயோகிக்கும் சிரோ, திருஷ்டி பேதங்கள் முறையே
(1) உல்லோகிதம், உத்வாகிதம் (2) உத்ஷிப்தம், அனுவிருத்தம்
(3) உத்வாகிதம், உல்லோகிதம் (4) உத்வாகிதம், பிரலோகிதம்

20. பெருவிரலுடன் நடுவிரலையும் மோதிரவிரலையும் சேர்த்து அபிநயிக்கும் அசம்யுத ஹஸ்தம்
(1) சிம்மமுகம் (2) ஹம்ஸாசியம் (3) ஹம்ஸபக்ஷம் (4) கடகாமுகம்

21. ஜாதி ஹஸ்தங்களுள் வைசிகரைக் காண்பிப்பதற்குப் பிரயோகிக்கப்படும் ஹஸ்தங்கள் முறையே
(1) வலதுகை சிகரம், இடதுகை ஹம்ஸாசியம்
(2) வலதுகை கடகாமுகம், இடதுகை ஹம்ஸாசியம்
(3) வலதுகை ஹம்ஸாசியம், இடதுகை கடகாமுகம்
(4) வலதுகை மிருகசீர்ஷம், இடதுகை சிகரம்

22. மிஸ்ரஜாதியின் சொற்கட்டாக அமைவது
(1) தகிட (2) தகதிமி (3) தகதகிட (4) தகதிமி தகிட

23. தம்பதியினரைக் காண்பிக்கும் பாந்தவ்ய ஹஸ்தம்
(1) வலதுகை கத்தரீமுகம், இடதுகை சிகரம் (2) வலதுகை மயூரம், இடதுகை மயூரம்
(3) வலதுகை மிருகசீர்ஷம், இடதுகை சிகரம் (4) வலதுகை மிருகசீர்ஷம், இடதுகை மிருகசீர்ஷம்

[பக். 3 ஐப் பார்க்க

**24.** தேவர்கள், கிருஷ்ணன், இந்திரன் போன்ற பாத்திரங்களைக் காண்பிப்பதற்கு கதகளி நடனத்தில் பயன்படுத்தப்படும் வேஷம்
(1) கரி (2) கத்தி (3) தாடி (4) பச்சை

**25.** தற்போது நாட்டியக்கச்சேரி முறையில் சேர்க்கப்பட்ட ஜயஜய, மங்களம் என்னும் சொற்களை உள்ளடக்கிய உருப்படி
(1) மல்லாரி (2) தோடயமங்களம் (3) ஜாவளி (4) கௌத்துவம்

**26.** சிலப்பதிகாரம் கூறும் கூத்துக்களில் உமையவள் ஆடிய கூத்து
(1) பாவைக்கூத்து (2) குடக்கூத்து (3) பேடிக்கூத்து (4) மரக்கால் கூத்து

**27.** ஹிந்துஸ்தானி, கர்நாடக இசை மரபுகளின் சேர்க்கையாகத் திகழும் இந்திய சாஸ்திரீய நடனம்
(1) ஒடிசி (2) மோகினி (3) கதக் (4) மணிப்புரி

**28.** சுவாதித் திருநாள் மகாராஜாவினால் பிடிலும் யானைத் தந்தத்தினாலான பெட்டியும் பரிசாகப் பெற்றவர்
(1) பொன்னையா அவர்கள் (2) வடிவேலு அவர்கள்
(3) சின்னையா அவர்கள் (4) சிவானந்தம் அவர்கள்

**29.** 'அழகர் குறவஞ்சி' என்ற நாட்டிய நாடகத்தைத் தமிழில் இயற்றியவர் யார்?
(1) தியாகராஜ சுவாமிகள் (2) மெலட்டூர் வெங்கடராம சாஸ்திரி
(3) கவிக்குஞ்சர பாரதி (4) கிரிராஜ கவி

**30.** விஷ்ணு, ஜமதக்னி மகரிஷிக்கு புத்திரனாகப் பிறந்து எடுத்த அவதாரம் யாது?
(1) வாமன அவதாரம் (2) பரசுராம அவதாரம்
(3) பலராம அவதாரம் (4) ஸ்ரீகிருஷ்ண அவதாரம்

**31.** வார்த்தைகள், உரையாடல்கள் மூலமாக வெளிப்படுத்தப்படும் அபிநயம் எது?
(1) ஆங்கிகா அபிநயம் (2) ஆகார்யா அபிநயம்
(3) வாச்சிகா அபிநயம் (4) சாத்விகா அபிநயம்

**32.** அழகாகக் கூவும் குயிலைக் காண்பிப்பதற்குப் பிரயோகிக்கும் ஹஸ்தம் யாது?
(1) மயூரம் (2) அராளம் (3) முகுளம் (4) தாம்ரசூடம்

**33.** பின்வருவனவற்றுள் அபூர்வ ஹஸ்தம் **அல்லாதது** எது?
(1) கட்வா (2) அர்த்தசூசி (3) பிரளம்பம் (4) திரிலிங்கம்

**34.** பருந்துகள் காற்றிலே பறந்து வருவதைக் குறிக்கும் வண்ணம்
(1) கஜகா வண்ணம் (2) உதார வண்ணம்
(3) உகுசா வண்ணம் (4) உரகா வண்ணம்

**35.** சாஸ்திரீய நடனங்கள் தொடர்பான பின்வரும் கூற்றுக்களைக் கருதுக.

A - செண்டை பக்கவாத்தியமாகப் பயன்படுத்தப்படும்.
B - சதிர், கூத்து எனவும் அழைக்கப்படும்.
C - சோபன இசை பயன்படுத்தப்படும்.
D - அபிநயங்களையும் உட்பிரிவுகளையும் கொண்டது.
E - 'பஞ்சகச்சம்' என்னும் ஆடை அணிந்து ஆடப்படும்.

இவற்றுள் பரதநாட்டியம் தொடர்பான கூற்றுக்களை மாத்திரம் கொண்ட தெரிவு யாது?
(1) A, B, C (2) A, C, E (3) B, C, D (4) B, D, E

[பக். 4 ஐப் பார்க்க